22nd August 1960]

SRI S. M. ANNAMALAI: இது வரையில் அந்தத் திட்டத்தினுல் நல்ல பலன் ஏற்படுகிறது என்று சர்க்காருக்குத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மேலும் மேலும் அந்தத் திட்டத்தை ஏன் விஸ்தரிக்கக்கூடாது என்று கேட்க விரும்பு கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதை விஸ்தரிப் பதற்கு இடம், அந்த பிராந்தியத்தினுடைய தகுதி இவை வேண்டியதாக இருக்கிறது.

*New Bus-stand for Cumbum*

*371 Q.—SRIMATHI A. S. PONNAMMAL (on behalf of Sri N. R. THIAGARAJAN): கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க் கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா கம்பம் பஸ் ஸ்டாண்ட் எடுக்கப்பட்டு எத்தனை வருடம் ஆகிறது ?

(அ) புது பஸ் ஸ்டாண்ட் அமைப்பதில் உள்ள கால தாமதத்திற்குக் காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (a) The bus-stand at Cumbum was closed on 4th September 1955.

(b) It is reported that the site proposed for the construction of the new bus-stand belongs to Sri Kambaraya Perumal Devasthanam and as such the Commissioner for Hindu Religious and Charitable Endowments has been approached for sanction and his orders in the matter are awaited.

SRIMATHI A. S. PONNAMMAL: அங்கே பஸ் ஸ்டாண்ட் அமைப்பதற்கு அந்த தேவஸ்தானத்தை இந்த அரசாங்கம் கேட்டதற்கு அவர்கள் கொடுக்காமல் இருந்ததற்குக் காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: 1957-ம் ஆண்டு கமிஷனரைக் கேட்டதற்கு 11—8—1958-ல் 15 வருஷங் களுக்கு மட்டும் தான் அந்த இடத்தை லீசுக்கு விட முடியும் என்று கோரி இருந்தார்கள். அந்த லீசும் அந்த 15 வருஷத் திற்குத் தான். வாடகை 100 ரூபாய் கொடுக்க வேண்டியதாக இருந்தது. அத்துடன் கட்டிடம் வேறு கட்ட வேண்டியதாக இருந்தது. அப்படி அமைத்து அதை உபயோகிப்பதாக இருந்தால் அது லாபகரமாக இருக்காது என்று கருதி 50, 60 வருஷ லீசில் விட வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக் கிருர்கள்.

*Tamarind*

*372 Q.—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்துக்கு எத்தனை டன் புளி இறக்குமதி செய்யப்படுகிறது ?

(ஆ) நம் ராஜ்யத்தில் புளி உற்பத்தியை அதிகப்படுத்துவதற்காக என்ன என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) About 24,300 tons (in 1959–60). This is only a rough estimate.

(*b*) Steps are being taken to plant more tamarind trees and also to protect the existing trees.

SRI P. G. MANICKAM : ரோடு ஓரங்களின் இரு புறங்களிலும் புளிய மரங்களை வைத்துப் பயிரிட வேண்டும் என்று சொல்லி அந்த விஷயத்தில் சம்பந்தப்பட்ட இலாகா இதற்கு முன் மிகவும், கவனம் செலுத்தி வந்தார்கள். தற்போது அவ்வாறு கவனம் செலுத்தப்படுவது இல்லை. அவ்வாறு கவனம் செலுத்தும்படியாக, அதாவது ரோடு ஓரங்களில் இரு புறமும் புளிய மரங்களை வைத்துப் பயிரிடுவதற்கு அதிகப்படியான கவனம் செலுத்தும்படி அரசாங்கம் சம்பந்தப்பட்ட இலாகாவுக்கு உத்தரவு பிறப்பிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : புளிய மர நிழல் அதிக உஷ்ணம் என்று கருதி அதை நிறுத்தி விட்டார்கள். இப்பொழுது புளி பற்றுக்குறை இருப்பதால் அதைப்பற்றி கனம் மராமத்து இலாகா அமைச்சர் அவர்களிடம் சொல்லி, ஹைவேஸ்களில் அதை வளர்க்க அதிகப்படியான கவனம் செலுத்தும்படியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, இனிமேல் புளிய மரங்களை வைப்பதாக உத்தேசம்.

SRI K. VINAYAKAM : Sir, in view of the increase in the price of tamarind and great scarcity felt in the supply of tamarind—we have been forced to import it from the Andhra Pradesh—will the Government be pleased to take steps to place a ban on the indiscriminate cutting of the fruit-yielding tamarind trees unless they are found to be sterile?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is, of course, a ban not only against the cutting of fruit-yielding tamarind trees but also against the cutting of other trees.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, புளிய மரங்
9–00 a.m. களில் பல்வேறு வகைகள் இருப்பதனால், சில மரங்கள் சில இடங்களில் நன்றாக வளருகின்றன ; சில மரங்கள் சில இடங்களில் நன்றாக வளருவதில்லை. எந்தெந்த இடங்களில் எவையெவை வளரும் என்ற ஆராய்ச்சி நடந்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : காட்டு இலாகாவினர் ஆராய்ச்சி செய்து, தகுதியுள்ள இடங்களில்தான் செடிகளை நடுகிறார்கள்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : புளிப் பற்றாக்குறை இந்த மாநிலத்தில் இருக்கும்போது, புளிய மரங்களை காளவாய்க்கும் மற்ற காரியங்களுக்கும் வெட்டுவதை நிறுத்தி, உரிய புறம்போக்கு நிலங்களில் புளிய மரங்கள் பயிரிட விவசாயிகளுக்கு அனுமதி அளிப்பார்களா?

22nd August 1960]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : புளிய மரம் மாத்திரமல்ல, எந்த மரத்தையும் வெட்டக் கூடாது என்று உத்தரவு இருக்கிறது. மரங்களை விருத்தி செய்யவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. தனி நபர்கள் செடிகள் நட்டுப் பயிரிட முன்வந்தால், அவர்களுக்கும் ஆதரவு அளிக்கப்படும்.

SRI N. MAHALINGAM: சாலை ஓர மரங்கள் சம்பந்தமாக ஆராயும்படி ஒரு கமிட்டி சர்க்காரால் நியமிக்கப்பட்டதா? அவர்கள் சிபாரிசுகளை அமுலுக்குக் கொண்டுவர ஏன் தாமதம் ஆகிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சாலை ஓரங்களில் உள்ள மரங்களைப் பாதுகாக்க, ஆங்காங்கேயுள்ள மரங்களை அந்தந்தப் பஞ்சாயத்துக்களிடம் ஒப்படைக்க சர்க்கார் உத்தேசித்திருக்கிறது.

SRI K. B. S. MANI: ஸார், மரங்களை வெட்டக் கூடாது என்று உத்தரவு இருப்பதாகச் சொல்லப்பட்டது. ஆனால், அடுப்புக் கரி அதிக விலையாக இருப்பதனால், பல மரங்கள் வெட்டப்பட்டு, கரியாக்கப்பட்டு, சென்னை போன்ற நகரங்களுக்குச் சப்ளை செய்யப்படுகின்றன. தனிப்பட்டவர்களுடையது தவிர, மற்ற பொது இடங்களில் உள்ள மரங்களை வெட்டக் கூடாது என்று ஒரு தனி உத்தரவு போடச் சர்க்கார் முயற்சிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கெல்லாம் உத்தரவு போட்டு அமுலில் கொண்டு வருவதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. கூடியவரைக்கும் மரங்களைப் பாதுகாக்க, கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI V. SUBBIAH: இப்பொழுது இருக்கும் புளி பற்றுக் குறையைப் போக்க, குறிப்பாகத் தமிழ்நாட்டில் எங்கள் பகுதியில், கடயம் போன்ற பிராந்தியங்களில், எலுமிச்சம் பழத் தோட்டங்கள் நன்றாக வளருவதால், அம்மாதிரித் தோட்டங்களை வைக்க உத்தரவு போட்டு, பற்றுக் குறையைச் சமாளிக்க சர்க்காரிடம் திட்டம் ஏதாவது உண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எலுமிச்சம் பழச் சாறு உடலுக்கு நல்லதுதான்; ஆனால், அதை எல்லோரும் உபயோகிக்க முடியாது; அதன் விலையும் அதிகம். இருந்தாலும், எலுமிச்ச மர அபிவிருத்தியிலும் அரசாங்கம் கவனம் செலுத்துகிறது.

SRI A. A. RASHEED : May I know whether these 24,000 tons were imported from other States or from abroad?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : They were imported only from other States in India.

[22nd August 1960

SRI A. VEDARATHNAM : தனி நபர்கள்புளிய மரங்கள் வளர்க்க முன் வந்தால், தக்க உதவியளிக்கப்படும் என்று அமைச்சரவர்கள் சொன்னார்கள் ; என்ன உதவி, எந்த வகையில் அளிப்பார்கள்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அக்கறையுள்ள தனி நபர்கள் கோரிக்கைகள் சமர்ப்பித்தால், அவர்கள் கோரிக்கைகளைப் பார்த்து, வேண்டிய உதவி அளிக்கலாம்.

SRI S. M. ANNAMALAI: கனம் அமைச்சரவர்கள் பதில் அளிக்கும்போது, புளிய மரங்கள் நடுகிறார்கள் என்று சொன்னார்கள். இப்பொழுது இருக்கும் பற்றாக் குறையை அது தீர்க்குமா? வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக்கூடாது என்று சொன்ன கோரிக்கையை இந்திய சர்க்கார் ஏன் ஒப்புக்கொள்ளவில்லை?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வேறொரு ராஜ்யத்திலிருந்து ஏற்றுமதி செய்யக் கூடாது என்று இந்த அரசாங்கம் கேட்டால் போதாது. அந்த அரசாங்கமே கேட்க வேண்டும்.

SRI S. RAMASAMI NAIDU: உடல் நலத்திற்கும் வளர்ச்சிக்கும் புளி அவ்வளவு நல்லதல்ல என்று அரசாங்கம் பிரசாரம் செய்ய முன் வருவார்களா ? (சிரிப்பு)

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஓரளவு புளியும் தேவைதான். அதிகமாகச் சாப்பிட்டால், அது உடலைக் கெடுக்கும்.

*Diploma holders in Civil and Rural Engineering*

* 373 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) whether the Government have received any petition from the Diploma holders in Civil and Rural Engineering awarded by the National Council of Rural Higher Education in connection with the recognition of their Diplomas; and

(b) if so, the details thereof.

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir.

(b) The Chief Engineer, Public Works Department (General), the Chief Engineer (Highways) and the Director of Technical Education, who were consulted, have submitted their reports. The matter is under the consideration of the Government.

*Cattle Breeding Societies*

* 374 Q.—SRI M. P. SARATHI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்திலுள்ள "கால்நடை வளர்ப்பு சங்கங்கள் "(Cattle Breeding Societies) மேற்பார்வைக்காக கூட்டுறவு இலாகாவைச் சேர்ந்த இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்களா?